[3rd April 1958

THE HON. SRI P. KAKKAN : மனைக்கட்டுக்காக ஒரு இடத்தை எடுக்கும்போது, அது நல்லயிடமா சுகாதாரமானயிடமா, அங்கு வீடுகள் கட்டினால் அது விழுந்து விடாமல் பலமாக யிருக்குமா என்றெல்லாம் பார்த்துத் தான்செய்ய வேண்டியிருக்கிறது.

MR. SPEAKER : அடுத்த இரண்டு கேள்விகளை சேர்த்து எடுத்துக் கொள்ளலாம்.

*Periyar E. V. Ramaswami*

* 543 *Q.*—SRI A. V. P. ASAITHAMBI : Will the Hon. the Minister for Home be pleased to state the state of health of Periyar E. V. Ramaswami confined in jail?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sri E. V. Ramaswamy Naicker, who was transferred to the Government General Hospital, Madras, for medical treatment for certain ailments, is now, after adjustment of his diet, comparatively free from the symptoms thereof, and is progressing satisfactorily. He has also been advised by the Medical Officers to read less and avoid eye strain, as he is developing early cataract.

* 544 *Q.*—SRI A. V. P. ASAITHAMBI : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government have any proposal to release Periyar E. V. Ramaswami?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer is in the negative.

SRI A. V. P. ASAITHAMBI : அண்மையில் சில திராவிடக் கழகத் தோழர்கள் உடல்நலம் இல்லாத காரணத்தினால் அரசாங்கத்தினால் விடுதலை செய்யப்பட்டதுபோல், பெரியார் ஈ. வே. ரா.-வையும் உடல் நலம் இல்லாத காரணத்தினால் விடுதலை செய்ய சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : உடல் நலம் சரியாக இல்லாத எல்லோரையும் விடுதலை செய்வதில்லை. திராவிடக் கழகத்தைச் சேர்ந்த சில ப்ரிஸனேர்ஸ்களை விடுதலை செய்தது, டிஸ்ட்ரிக்ட் மெடிகல் ஆபீஸர் அவர்கள், அவர் குணமாவது கஷ்டம், அவர்கள் குணமாகவதற்கு வெளியில் அனுப்பிவிடுவதுதான் நலம் என்று சொன்னதால் தான் அவர்களில் சிலர் விடுதலை செய்யப்பட்டார்கள். ஆனால் பெரியார் ராமசுவாமி நாயக்கரைப் பொறுத்தமட்டில் அப்படிப்பட்ட அபிப்பிராயத்தை மெடிக்கல் ஆபீஸர் சொல்லவில்லை. ஜெனரல் ஹாஸ்பிட்டல் டீன், ulcerated skin over hernial sac அதற்காக ட்ரீட்மெண்ட் நடக்கிறது, இன்னும் கொஞ்சம் நாள் ஹாஸ்பிட்டலில் இருக்கவேண்டுமென்று அபிப்பிராயப்படுகிறார். ஆகவே, விடுதலை செய்யும் பிரச்னை இல்லை.

SRIMATHI HEMALATHA DEVI : ஈ.வே.ரா. பெரியார் ஜாதி ஒழிப்பிற்காக வேலை செய்கிறேன் என்று சொல்லிக்கொண்டு இல்லாத ஜாதிகளை அதிகப்படுத்திக்கொண்டிருப்பதால் அவர் வெளியில் இருப்பதைவிட ஆஸ்பத்திரியில் இருந்துகொண்டு ஓய்வு எடுத்துக்கொள்வது நன்மையல்லவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் சொல்வது, ராமசுவாமி நாயக்கர் அவர்களுக்கு அளிக்கிற யோசனையாகும்.

SRI S. B. ADITYAN : ஐயா, ஈ. வே. ரா-வை சிறையில் வைத்துக் கொண்டு வைத்தியச் செலவை அரசாங்கம் ஏற்றுக்கொள்வதைவிட அவரை விடுதலை செய்து அவர் சொந்த செலவில் வைத்தியம் செய்து கொள்ள ஏற்பாடு செய்யக்கூடாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினருக்கு ராமசுவாமி பெரியார் அவர்களிடம் ரொம்ப அக்கறையிருப்பதாக என்னிடம் அடிக்கடி காட்டிக்கொள்வதுண்டு. அங்கத்தினர் அவர்கள் சர்க்கார்